உ

கணபதிதுணை.

சுத்தாத்வைதவேதாந்தாசாரியராகிய

# தத்வராயஸ்வாமிகள்

அருளிச்செய்த

அடங்கன்முறையுள் மோகவதைப்பரணியிலிருக்கின்ற

# சசிவன்னபோதத்திற்குத்

திருத்துருத்தியின்கணெழுந்தருளிவிளங்கிய

இந்திரபீடங் கரபாத்திரஸ்வாமிகள்

ஆதீனத்திற்குரிய - பிறைசை

# அருணாசலஸ்வாமிகள்

இயற்றிய உரை.

---

இஃது

௧௭ - நம்பர் - பட்லர் - பட்டாளத்திலுள்ள

ஹிந்துக்களிற் சில புண்ணியவான்கள்

கேட்டுக்கொண்டபடி

ஷை உரையாசிரியர் மாணாக்கராகிய

**ஈசூர் - சச்சிதானந்தஸ்வாமிகளாற்**

பரிசோதித்து

**உவ. புஷ்பரதசெட்டியாரவர்களது**

கலாரத்நாகரம் என்னும்

அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டது.

பிரமோதூத௵ - ஆவணி௴.

இதன் விலை - ரூபா - ௨.






உ

சிவமயம்.

# உரைச்சிறப்புப்பாயிரம்.

நேரிசையாசிரியப்பா.

இஃது

ஈசூர் - சச்சிதானந்தஸ்வாமிகள்

இயற்றியது.

---

திருத்தகுதெய்வத் திருவாரூரிற்
குருத்தகுசுகாதனங் கொண்டுவீற்றிருந்து
பொருளல்லவற்றைப் பொருளெனக்கொள்ளு
மருளிஃதென்று மயக்கறக்காட்டுந்
தேசிற்சிறந்த சிவப்பிரகாச
தேசிகனடியைச் சிந்தையிற்கொண்டு
புத்திவிகற்பப் பொய்யதுநீங்கிச்
சித்துருவாகித் திகழ்பவனெந்தைச்
சொரூபாநந்தன் சொற்றவருது
நிருபாதிகமெனு நிலையதுங்கடந்தங்
கப்பொருளப்பொரு ளாகிவிளங்குந்
தப்பொப்பிலாத தத்துவராய
ரம்மெனச்சொல்ல வகலெனவாசான்
றம்மதிகடந்து சாற்றியதான
பதினெண்சாத்திரப் பகுதியினொன்றாய்ப்
பதிமோகவதைப் பரணியினடங்குஞ்

## சிறப்புப்பாயிரம்.

சசிவன்னபோதச் சாத்திரமதற்கு
நிசிவன்னமல நிலையதுபோக்க
வுரைநயம்பொருணய மொருங்குறநோக்கி
யுரையியற்றினனெளி துணர்தரயாரு
முவாமதிவந்திவர்ந் துலவுமாளிகைநிரை
தவாப்பிறையாறெனுந் தண்டமிழ்நாட்டினன்
அறிவன்றியில்லை யறிவனவெல்லா
மறிவாக்காண்டற் காவனவாக்கிய
ஆதிசங்கரனன் றணிபெறநாட்டிய
பேதியாவிந்திர பீடத்தமர்ந்து
திருத்தருத்தியின்கட் சேர்பெறவிளங்குங்
கரபாத்திரனெனுங் கடவுளாதீனத்
திற்குரியவனுந் திருநாகையிலொளிர்
சிற்பிரகாசத் திருவருணசல
வடிகளுக்கடிய னனுபவரசமாய்ப்
படிமிசைத்திசழ்பவன் பதைப்பறநோக்கித்
தன்னைத்தரற்குத் தக்கவன்
மன்னருணசல மகானுபூதியனே.

---




உ

சிவமயம்.

# சசிவன்னபோதம்.

உரையாசிரியரது

## பிர்மஸ்துதி.

அதிதபூ ரணமாயெங்கு மாகியு மாகாதென்றும்
புதியதாம் பரமானந்த போதனைப் புணர்ந்துவாழ்வாம். (க)

தேவர்மா னிடர்மற்றுள்ளோர் முனிவரர் சிந்தைக்கெட்டா
மூவரு மறையும்போற்று முதல்வனைப் போற்றல்செய்வாம். ()

## விநாயகஸ்துதி.

வேறு.

தில்லைவாழ்கற்பகன் பதஞ்சிந்திக்க
நல்லிநூற்குரை நாவினுதிக்குமே. (௩)

## சுப்பிரமணியஸ்துதி.

சிதம்பரத்தில்வாழ் சிங்காரவேலவன்
பதம்பணிந்துரை பன்னப்பாலிக்குமே. (௪)

## நடேசஸ்துதி.

புண்டரீகபுரத்தனைப் போற்றவித்
தண்டமிழ்க்குரை தானேவிளங்குமே. (௫)

## சிவகாமிஸ்துதி.

புலியூர்வாழுஞ்சிற் பூவையைப்போற்றவே
வலியவந்துரை வாய்த்திடுங்காணுமே. (௬)

குருஸ்துதி.

வேறு.

திருத்தருத்தியின்மேவிவாழெங்கள்தேசிகன்கரபாத்திர
னருட்பணிக்குரியோர்பதம்பணிந்தன்பினலருணைகைவாழ்
குருபரன்னருணசலப்பெயர்கொண்டதேசிகன்கோதிலா
விருபதம்பணிந்திந்தநூற்குறைசெய்வன்யாவுமிலங்கவே. (எ)

அவையடக்கம்.

வேறு.

பிரமகூடத்தன்றன்னிற்பிரிவறநிறைந்துநின்ற
தரமறவிளங்குஞ்சோதித்தற்பரன்றன்னைக்காட்டு
முரையதுமுளவோவென்னிலொளிர்பளிக்கதனைக்காண
மனமுகந்தோன்றுமாபோன்வயங்கிடுமென்பர்மேலோர். (அ)

இவ்வுரைசெய்தோன்வாக்கினெளிமைபோலிஃதென்றெண்ணித், திவ்வியவுணர்வின்மிக்கோர்செப்பிடாரஃதென்னெனின்ற், கவ்வியபொருளிலக்கவுயர்வினைவரைந்தோன்றீனஞ், செவ்வியபொருளோன்றன்னைச்சேர்ந்திடாததனுன்மாதோ. (கூ)

முற்றிற்று.

---



நூற்பெருமை.

தரணிபுகழ்தத்துவஞர்தாமுரைத்தஞானப்
பரணிதனைக்கட்டவிழ்த்துப்பார்க்கிற் - கரணமுடன்
சேர்ந்துமணவாதுசிவமணமேபூரித்துச்
சாந்தமணநாறுமேதான். (க)

நூலாசிரியரது

சொரூபவணக்கம்.

படைப்பானும்வியன்ஞாலங்காக்குமாழிப்
படையானும்படைத்தளிக்கப்பட்டவெல்லாந்
துடைப்பானுஞ்சுருதிகளுந்தொழுதுபோற்றுஞ்
சொரூபானந்தச்சுடரைத்தொழுதல்செய்வாம். (உ)

மூன்னூற்றொடர்பு.

அருவனுயினுமன்பர்க்குருவமாய்
வருவனென்பதுமாமறைகாணுமே. (௩)

தேவியிப்படிகூறத்திருவுளம்
பாவியேற்கிலதென்றுபதைக்கவே. (ச)

---

சசிவன்னபோதம்.

சசிவன்னபோதமென்பது - சசிவன்னனது ஞானத்தை யுணர்த்துநூலென, ஆரும்வேற்றுமைத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகையாய்ப் படலத்திற்குக் காரணக்குறியாயிற்று.

---

# இந்நூற்கவதாரிகை.

வடமொழியிலமைந்து மாட்சிமைபெற்று மறைமுடிவின்க
ண் விளங்கு மகாவாக்கியத்தி னிலட்சியார்த்தமாகிய வத்து
விதசொரூபமே சிரவணாதிகளா லையந் திரிபறத்தானெனத்தே
ர்ந்த தத்துவராய சுவாமிகள் தாம்பெற்ற சுவானுபவப் பேறெ
ளிதில் யாவர்க்கும் விளங்கக் காருணியத்தாற் றன்பாற்பொ
ங்கிய தென்னூற்பிரபந்தங்களிற் பதினேழாவதா யுள்ள மோ
கவதைப்பரணியி லபரிச்சின்ன வஸ்துவணக்கமே கடவுள்வா
ழ்த்தும், மகான்கள் வாக்குத்திறத்தலே கடைதிறப்பும், தாப
த்திரயமே பாலை வனமும், பிரபஞ்சத்தவரோ புறச்சோலைப் பே
ய்களும், அவர்களிற் சற்கிருத்திய முள்ளவர்களே யுட்சோலைப்
பேய்களும், பிரமசமுகமே பலிபீடமுஞ், சுத்தமாயையே காளி
யுஞ், சிற்சத்தியே யாலவிருட்சமுமாமெனப் பரணிக்குரியவங்
கங்களாகத்தொகுத்து மேற்கூறிய பேய்க்கணங்களுணவில்
லாமற் பசியான்மெலிந்து தேவிபாற்சென்று முறையிட வதற்
குத் தேவி நிரதிசயானந்தத்தைப் பிரமமாகவு, மதனது பகிர்
முகசங்கற்பத்தை மாயாசத்தியாகவு, மக்கூட்டரவிலுதித்த ச
ங்கற்பத்தை மானதபுத்திரனாகவு, மவனது பகிர்முகசங்கற்பத்
தைப் பிரவிர்த்தியென்னு மூத்த மனைவியாகவு, மவனது அந்
தர்முக சங்கற்பத்தை நிவர்த்தியென்னு மிளையமனைவியாகவு
மூத்தாண் முயக்கிலுதித்த மயக்கத்தை மோகனென்னும் புத்
திரனாகவு, மிளையாண் முயக்கிலுதித்த தெளிவை விவேகனெ
ன்னும் புத்திரனாகவு, மம்மோகத்தைச் சார்ந்த சங்கற்பங்களை
க் காமனாதிய படைத்தலைவராகவு, மவ்விவேகத்தைச் சார்ந்த
சங்கற்பங்களை நிருபகனாதிய படைத்தலைவராகவுங், காமனாதி



ய படைத்தலைவர் காரணமாயுதித்த சங்கற்பங்களை மோகன
து சேனாசமுத்திரமாகவு, நிருபகனாதிய படைத்தலைவர் கார
ணமாயுதித்த சங்கற்பங்களை விவேகனது சேனாசமுத்திரமாக
வுங் கற்பித்து பிரமத்திற் கிளவரசாயுள்ள மானதனென்ப
வன் றனது தாயாகிய மாயையென்பவளி னனுமதி பலத்தைப்
பெற்றுத் தனது தந்தையாகிய பிரமத்தைச் சிறைச்சாலையிற்
பந்தனஞ்செய்து தனது மூத்தமனைவியின் சுதனான மோகனு
க்குப் பட்டந்தரித்துத் தன திளைய மனைவியின் சுதனான விவே
கனை மோகன் சொன்னவாறு கேட்க வவன் வசப்படுத்திப்
போக, வன்றுமுதற் காமனாதிய மந்திராலோசனைத் தலைவர்
கூடி விவேகனாதியருக்குக் கொஞ்ச மிடங்கொடுத்தா னமது
பிதாமகனாகிய பிரமத்தினது சார்புபெற் றவர்கள் நம்மைத் த
மது வசப்படுத்திச் சகிக்கப்படா விடுக்கண்செய் தலையக்காண்
ப ராதலி னிவர்களைத் தலையெடுக்கா தடக்கி வதைசெய் தஞ்ஞா
னாந்தகாரத்தான் மூடப்பெற்ற செகதாரண்ணியத்தில் விடை
யமெனுங் காய் கனிகளைத் தின்று சீவித்திருக்க வெத்திசையி
லுங் காணாமற் றுரத்திவிடுவதே நலமென்றுலோசித் தவ்வாறு
செய் தவர்களைத் துரத்திவிட, வப்போது விவேக னிருபகனாதி
ய மந்திராலோசனைத் தலைவனைக்கூட்டி யினி யா மெவ்விதத்
தாலேனு நமது பிதாமகன் சார்புபெற் றவரது சிறை தவிர்த்
தற்கும், பிதாமகி சார்பொழித்து மோகனாதியரை நமது வச
ப்படுத்திக் கருவறுத்தற்கு மெங்ஙனஞ் செய்தா லியாவருஞ்
சுகமுறுவார்க ளென்பதற்கு மெவ்விதமுயற்சியா லிவர்கள்
செயிக்கப்படுவார்க ளென்பதற்கு மேற்ற வாலோசனையி லிரு
க்கையி லஃதுணர்ந்த வவ்வதீதப் பிரமந்தானே சொரூபாநந்த

ரென நாமரூபங்கொண்டு விவேகனுதியர்பா லெழுந்தருளி வந் தவர்கட் கனுக்கிரகிக்க வவ்வனுக்கிரகத்தை யவர்கண் மிக்கவுபபலமாகக்கொண்டு, மோகனுதியனை நிர்மூலப்படுத்தி வெல்ல, வங்ஙனம்வென்ற போர்க்களத்தின்கட் சிதைந்துள்ள மாமிசாதிகளைப் பாகஞ்செய் ததனைப் புறச்சோலைப்பேய்கட்கும், அஸ்தியாதிகளை யிடித்துக் கூழ்செய் ததனை யுட்சோலைப் பேய்கட்கு; மவற்றின் பவப்பசிதீர வளிக்குமுயற்சி நடக்கப் போகின்றது. இஃதுங்கள் நல்லகாலமெனத் தேவி பேய்கட்குக் கூறியதாகவகுத்து, அருவனுயினு மன்பர்க்குருவமாய் வருவனென்பதற்கிணங்க வோரிதிகாச முண்டாரவெனத்தோன்றிய வையந்தவிர்த்தற்கு விஷ்ணுமுதலிய தேவர்களுக்குப் பரமசிவ னுபதேசித்த விதிகாசத்தைத்தானே யிங்கே முத்திகூறலென்னு மத்தியாயமாக்கி யதி லவ்வதீதப் பிரமமே மாநந்திபராயணனுக வடிவங்கொண் டெழுந்தருளி வந்து சசிவன்னனுக் கனுக்கிரகித்த வுபதேச சாம்பிரதாயத்தைக் கூறுவது.

(அவதாரிகை.) பக்குவவான்க டமது பவத்துன்ப நீங்குமோவெனத் தபிக்கு மச்சநீக்கி யவர்களை யகமுகப்படுத்தல்.

(கவி.) அலகையச்சமறவகவான்களு
முலகின்முத்திபெறும்பரிசோதுவாம்.

(இதன்பொருள்.) அலகை - சமையவான்களென்னும் பேய்களது, அச்சமற - பவப்பிணிக்கஞ்சுமச்சந்தீர, அகவான்களும் - அசம்பாவச்சிரோட்டரும், உலகில் - பிருதிவண்டத்தில், முத்திபெறும்பரிசு - முத்தியடையுமார்க்கத்தை, ஓதுவாம் - சொல்லுவாம். என்றவாறு.



முத்திபெறும்பரி சலகைக்கன்மையானு, முன்னர்சமையவான்களையே பேயெனக்கற்பித்துக் கூறினமையானு, மிங்கே யலகையென்றதற்கு, சமையவான்களெனவு, முமூட்சுத்துவஞ், சமாதிசட்கசம்பத்தி, இகமுத்திரார்த்தபலபோகவிராகம், நித்தியாநித்திய வஸ்துவிவேகம், யோகங், கிரியை, சரியை, நாஸ்தி, நபாதித்துவம், இம்மைமறுமைக்கேற்ற சிந்தனை கனவினுமின்றிக் கண்டதேகாட்சிக் கொண்டதேகோலமா நிற்கு மவுட்டிகமென்பவைகளிற் ருழ்வாயுள்ளது மவுட்டிகதிசையாதலா லிம்மவுட்டிகதிசையோரையே யகம்பாவச்சிரோட்டரெனவும், ஏனையகதிகளிலின்றி முத்திப்பேறு மக்கட்கதியிலாதலானு மம்மக்கட் பேறுக்கிடம் பிருதிவண்டமாதலானு மிங்கே யுலகென்றதற்குப் பிருதிவண்டமெனவு மிங்ஙன முறைகொண்டாம். அகவான்களு மென்பதற் கந்தர்முகிகளுமெனப் பொருள்கொள்ளி னவர்கள் முத்திபெறும் பரிசோதுவதாற் சிரோட்டமில்லையாதலிற் கூடாது. சாதனமுதிர்ந்தோருமன்றி யேனையோருமெனப் பொருடரக்கிடந்த வகவான்களு மென்பதின்கண்ணுள்ள உம்மை [illegible]ந்தது தழீஇய எச்சவும்மை.

வினு.—சமையவான்களை யலகையென்ற தென்னை?

விடை.—வாச்சியார்த்த லட்சியார்த்தங்களைச் சுருதிகாரணமாயன்றித் தற்பிரத்தியட்சகாரணமா யுணராமையானு, மங்ஙன முணராதவிடத் தகம்புறத்தி னிறைவாய்த் தமக்கு விளங்குவது விடயகதப் பிரத்தியட்சமாதலானு மவ்விடயகதப் பிரத்தியட்சத்தினின்று மவர் கூறும் வாச்சிய லட்சியார்த்த சித்தாந்த முரணுமாதலானு மங்ஙன முரணுதல் தெரியாதுனாக்

கும் வசன முன்னுக்கும் பின்னுக்குஞ் சம்பந்தமற்ற வுளறலா
யமையுமாதலானு மவ்வுளறல் பேய்க்குணமாதலானு மென்க.

விஞ.—பரமேசனுதிய தேவர்களாலு முனிவர்களாலும் வி
திக்கப்பெற்றது சமையமன்றோவெனின் ?

விடை.—ஆம். அவாங் மனோகோசரமாய்த் தானே தானக
விளங்குவது முத்தியாதலி னதனைவெளிப்படுத்துநிமித்த நான்
கு பூதத்தினும் வியாபித்திருப்பதுமன்றியு மவைகளாக விளங்
கியு மொருவர்க்குந்தோன்றாது நிற்கும் பூதாகாயத்தைக் கா
ண்பிக்குநிமித்தங் கடாகாயமுதலிய வாகாயத்தைக் காண்பித்
தவற்றை நீக்கிப் பூதாகாயத்தை வெளிப்படுத்துஞ் சாதுரிஸ்ய
த்தைப்போலப் பிரகிருதிமுதற் பிருதிவிவரையினும் வியாபித்
திருப்பதுமன்றியு மவைக டானக விளங்கியு மொருவருக்குந்
தோன்றாது நிற்குஞ் சிதாகாயத்தை யாவர்க்குந் தரிசிப்பிக்
கச் சாதுரிசயமாகக்கூறிய விம்பப் பிரதிவிம்ப ஞாயத்தாற்
சமயோத்தமாகப் பக்குவத் தளவுக்கேற்கச் சீவேசுர கூடத்த
பிரமமெனவு மதற் கதீதஞ் சுத்தப்பிரமமெனவு மிதுவே தா
னெனவுங் கற்பித்துக்கூறியதை பூருவபட்சமென்றுஞ் சித்தா
ந்தமென்று முய்த்துணர வகையறியா தந்தந்த வவசரநிலையே
யுண்மைப்பொருளெனக் கருதி மேற்றாவா தங்கங்கே தியங்கி
நிற்பா ரந்நெறிச்செல்ல வேதாந்தமுத லுலகாயித மீறாக்கிடந்
த சமஸ்த சமையங்களும் விதிக்கப்பெற்ற தென்க.

விஞ.—அற்றேல், வேதாந்த ரவிப்பிராயமு மிதுதானோ
வெனின் ?

விடை.—இதுவேயாமென்க.



(இதன்முற்பரியம்.) உலகத்தின்கண் சமையத்தினுஞ் சமை
யாதீதத்தினுமுள்ள முமூட்சுக்கள் பலவான மார்க்கங்களை
யுறுதியாகக்கருதித் தவியாம லவர்கட்குச் சுலுவான மார்க்க
மாயுள்ள முத்திகூறலைக் கருணையாற் கூறினுரென்பதாம். (க)

(அ-கை.) மேன்முத்தி பெறும் பரிசென்பது ஞானிகள்
கிருபாநோக்கத்தாலெனல்.

(கவி.) புணர்ந்தபாவமெலாம்பரிபூரண
முணர்ந்தஞானிவிழிபடவோடுமே.

(இ-ள்.) புணர்ந்த - சங்கற்பத்தாலணைந்த, பாவமெலாம் -
பாவனு கன்மங்களனைத்தும், பரிபூரணம் - யாவுஞ் சின்மாத்
திரமாக, உணர்ந்தஞானி - தெளிந்த ஞானவானது, விழிபட-
கடாட்சந்தங்க, ஓடும் - நீங்கும். எ-று. ஏ - ஈற்றசை.

பதசாரம்.—தனது சங்கற்பத்திலுண்டான சீவேசுரசகத்து
முதலிய கற்பிதமனைத்தினுங் கூடுதலைப் புணர்ந்த பாவமெலா
மெனவும், அச்சங்கற்பந் தன்னிற்கரைந்து யாவுந் தானகவிள
ங்குவதைப் பரிபூரணமுணர்ந்த ஞானியெனவும், இவ்விளக்கப்
பார்வையாற் சகல கன்மமு நசித்தலை விழிபடவோடுமெனவுங்
கூறினர். இங்ஙனங் கூறுதற்குப் பிரமாணம் ஞானநூற் பல
வினுமுள்ள உபதேசகாண்டத்திற் காண்க.

விஞ.—"தாந்தாமுன் செய்தவினை தாமே யனுபவிப்ப" மெ
ன்னு மவ்வைவாக்கியப்படியேயும், தானே சங்கற்பித்துத் தன்
மாத்திரத்தா லென்னும் வாசிட்ட வாக்கியப்படியேயுந், தன
து சங்கற்பத்தி னறியாமையினுற் கட்டுப்பட்ட சஞ்சிதமாதி
ய வினைக ளனுபவித்தாவது அச்சங்கற்பத்தி னறிவினு லவ்வி

னைக ளெரித்தாவது தீரவேண்டுவதே யன்றி யொருவர் சங்கற்பத்தினா லுண்டான வினைக ளொருவர்சங்கற்பத்தினா லெங்ஙனந் தீருமென்னில்.

விடை.—"பஞ்சினை யூழித்தீப்போற் பலசன்ம விவிதவித் தாஞ் சஞ்சிதமெல்லா ஞானத் தழல்சுட்டு வெண்ணீருக்கு" மென்ற கைவல்லிய நவநீதப்படியேயும், ஆனந்தங்குரு, வறிவே சீடனென்ற தெத்தாத்திரைய சாமிகள் சாம்பிரதாயப் படியேயும், "ஐயனே யெனதுளேநின் றனந்த சன்மங்களாண் டமெய்யனே யுபதேசிக்க வெளிவந்த குருவேபோற்றி" யென்ற கைவல்லிய நவநீதப்படியேயும், "தேட்டந் திரண்ட திருமேனி" யென்ற வள்ளலார் வாக்கியப்படியேயும், தனதறிவிற்காதாரமான வானந்தோதயத்தி லவ்வறிதல் கரைதலா லவ்வினைக ணீங்குமென்க.

(இ-ம்.) சித்தே யானந்த மானந்தமே சித்தென்ற வொருமையான பிரமமே யோருருவாக வந் தனுக்கிரகிக்கு ஞானாசாரியர் விழியின் மகிமை கூறியதாம். (உ)

(அ-கை.) அதனை யுடையவனது மகிமையு மம்மகிமையுள்ள வோரிதிகாசமுங் கூறல்.

வேறு.

(கவி.) எழிலாருஞானி புகழென்னைகூற
வுயர்வீடிவன்சொல் வழிசெய்
தொழிலாள ராகை யதுகேளுமுன்னை
யிதிகாச மொன்று சொலவே.



(இ-ள்.) எழிலாரும்-(யாவற்றையும் விளக்கிக்கொண் டிருக்கின்ற) பிரமதேஜசு மிகுந்த, ஞானி - ஞானவானது, புகழ் - புகழை, என்னைகூற - என்னென்று சொல்ல, உயர்வீடு - மேலான மோக்ஷமானது, இவன்சொல் வழிசெய் - இஞ்ஞானவானுபதேசக் கிரமத்தின்படி நடக்கும், தொழிலாளராகை - அடியாரதாதல், முன்னையிதிகாசம் - (இவ்வாறுள்ள) பூர்வசரித்திரம், ஒன்று - ஒன்றிருக்கின்றது, சொலவே யதுகேளு - அதையாஞ் சொல்ல நீ கேட்பாய். எ-று. ஏ - ஈற்றசை.

(இ-ம்.) ஞானவானது மகிமையை யவனடிமையை முன்னிட்டும் இஃதுண்மை யென்பதை யோரிதிகாச முன்னிட்டுங் கூறியதாம். (௩)

(அ-கை.) அவ்விதிகாச மிதுவெனப் பொதுப்படக் கூறல்.

(கவி.) தந்தாபமுற்ற பரனேவல் செய்த
வவனுற்ற பேறு தனைமுன்
செந்தா மரைக்கண் முதல்வற்கெம் மண்ண
றிருவாய் மலர்ந்த திதுவே.

(இ-ள்.) தந்தாப முற்ற - தனது தாபத்திரய நீங்க, பரனேவல் செய்த - குருசிசுருஷைசெய்த, அவன் - அப்புருடன், உற்றபேறுதனை - அடைந்தகதியை, முன் - பூருவத்தில், செந்தா மரைக்கண் - சிவந்த தாமரைபோன்ற கண்களையுடைய, முதல்வற்கு - முதல்வனாகிய விஷ்ணுவுக்கு, எம்மண்ணல் - எமது பரமசிவன், திருவாய் மலர்ந்தது - அனுக்கிரகஞ் செய்தது, இதுவே - இக்கதையேயாம். எ-று. ஏ - ஈற்றசை.

தாபமென்றது - தாபத்திரய துன்பங்களை;

(இ-ம்.) அவ்விதிகாசம் வந்த திவ்வாறென்பதாம். (ச)

(அ-கை.) அவ்விதிகாசத்தில் முத்திபெற்றுனிணைய னெனல்.

(கவி.) உவமிப்பின்ஞானி விழிபட்டு முன்னை
விளைவிட்டு முத்தி யுலகிற்
றவமற்ற வெய்ய வினையேபுரிந்த
சசிவன்ன னெய்து கதையே.

(இ-ள்.) உவமிப்பில் - ஒப்பிடப்படாத, ஞானிவிழிபட்டு - ஞானவானது கிருபாநோக்கந் தங்கி, முன்னை வினைவிட்டு - முன்னுள்ள சஞ்சிதமாதிய வினைகணீங்கி, முத்தி - மோட்சத்தை, உலகில் - இவ்வுலகத்தின்கண், தவமற்ற - அவமாகிய, வெய்யவினையேபுரிந்த - கொடியதீவினையையே செய்த, சசிவன்னன் - சசிவன்னனென்பவன், எய்துகதையே - அடைந்த கதையேயாம். எ-று.

(இ-ம்.) அவ்வரலாற்றின் முத்திபெற்ற சீடனது நாமத்தைக் கூறியதாம். (ரு)

(அ-கை.) அவனது தீவினையின் வலியிங்ஙனமெனல்.

(கவி.) ஏமம்புகல் வாருளர் பாதகரா
மியாவர்க்குளு மிக்கவ னுகுமிவ
னுமம் புகல்வார் குலமும் மெரிவாய்
நரகம்புகு மாறு நடந்தனனே.

(இ-ள்.) ஏமம் - விடயாநந்தமே, புகல்வார் - கதியாகவடைந்தவர்களுக்கு, உளர் - உலகத்திற் பாத்தியராயுள்ள, பாதகராம் - பாவிகளாகிய, யாவர்க்குளும் - அனைவருக்குள்ளும், மிக்கவனுகும் - மிகுந்தவனுன, இவன் - இச்சசிவன்னன், நாமம் புகல்வார் - தனது நாமஸ்மரணஞ் செய்தவர்களும், குலமும் - அவர்கள் வம்சமும், எரிவாய் - அக்கினிமயமாகிய, நரகம்புகுமாறு - மாபூதியென்னு நரகத்தை யடையும்படி, நடந்தனன் - நடந்துகொண்டான். எ-று. ஏ - ஈற்றசை.



குலமு மென்றது - இறந்தததழிஇய எச்சவும்மை.

(இ-ம்.) இவனுமை முனைத்தவனு மவனதுகுலமு மடையுங் கதியைக் கூறினதாம். (சு)

(அ-கை.) அவ்வலியாற்றன் வமிசப்பிதிரர்க்குற்றது கூறல்.

(கவி.) மலமேவிய தீவினை யின்வலியான்
மகிழும்பர் பதத்தி லிருந்தவிவன்
குலமேவிய தென்புல வாணர்களுங்
கொடிதா நரகங்குடி யேறினரோ.

(இ-ள்.) மலமேவிய - மும்மலப் பெருக்கால் விளைந்த, தீவினையின் - கொடிய பாவகிருத்தியத்தின், வலியால் - வலிமையினுல், மகிழ் - மகிழத்தக்க, உம்பர்பதத்தில் - சுவர்க்கத்தில், இருந்த - சுகித்துக்கொண்டிருந்த, இவன்குலமேவிய - இவன் வம்சத்திற் பிறந்திறந்த, தென்புல வாணர்களும் - பிதிர்க்களும், கொடிதாநரகம் - ரவுரவநரகத்தில், குடியேறினர் - குடியேறினுர்கள். எ-று. ஏ - ஈற்றசை.

(இ-ம்.) தமது சற்கிருத்தியத்தாற் சுவர்க்கத்தின்கண் மகிழ்ந்திருந்த விவன் வம்சத்தாரனைவரு மிவனது துற்கிருத்தியத்தா லம்மகிழ்ச்சியை நீங்கி நரகதுன்பத்தை யடைந்தார்க ளென்பதாம். (எ)

(அ-கை.) மறுமையி லனுபவிக்கத்தக்க வினைப்பயனனைத்து மிம்மையிற்றானே யிவன்பாலெய்தின வெனல்.

(கவி.) மிகமேவிய புண்ணிய பாவமெனும்
வினையின்பயன் மேலொரு காலமுறா
திகமேவரு மென்பத னாலுளதோ
வெல்லா மிவனைச் செற வெய்தினவே.

(இ-ள்.) மிகமேவிய - வரையின்றிவிளைந்த, புண்ணிய பாவமெனும் வினையின் பயன் - நல்வினை தீவினைப் பிரயோசனங்கள், மேலொருகால முறாது - மேற்பவுஷியகாலத்தி லடையாமல், இகமே - இப்போதே, வருமென்பதனால் - அனுபவிக்கவருமெனச் சுருதிசொல்லுகின்ற படியினால், உளதோ - மேலிவ னனுபவிப்ப தென்பதுண்டோ, எல்லாம் - தீவினைப்பயனனைத்தும், இவனைச்செறவெய்தின - இச்சசிவன்னனை யிம்மைக்கண்ணே மிகவு மடைந்தன. எ-று. ஏ-ஈற்றசை.

வினா.—ஒருவன்செய்தவினை செய்தவனையேயன்றி யேனையோரையு மியக்குமோ வெனின்!

விடை.—ஆத்மசம்பந்தம், சிவசம்பந்தம், கரணசம்பந்தம், இந்திரியசம்பந்தம், தேகசம்பந்தமெனக் கிடந்த வைந்தனுள், ஆத்மசம்பந்தமாவது, ஞானாசிரியரதுபதேச லட்சியா



ர்த்தத்தி னிலைத்த சீடன் றற்சுதந்தரமின்றி யவரது பூரணநோக்கிற் சம்பந்தித்தலி னவர் கதியிவனுக்கு மாதல்.

சிவசம்பந்தமாவது.—காமியாசாரிய ருபதேசவழியினின்ற சீடனவராணையா லியாகாதி கன்மங்களிற் சம்பந்தித்தலினவர்போக மிவனுக்கும் வருதல்.

கரணசம்பந்தமாவது,—அரசன்மனதிற்கியைந்த வமைச்சனாதியோ ரவனாணையிற் சம்பந்தித்தலி னவனது செங்கோலே யிவர்கட்குமாதல்.

இந்திரியசம்பந்தமாவது,—மகளிரது பார்வைக்கியைந் தவள் வழிபட் டவளு மிவ்வாறாகத் தம்பா லியையப்பெற்ற விடனொருவ னவளது சயிக்ஞைப்படி யாலிங்கனச்சேட்டையிற் சம்பந்தித்தலி னவள்சுகமே யிவனுக்குமாதல்.

தேகசம்பந்தமாவது,—மாதா பிதாக்களது சுக்கில சுரோணிதப் புணர்ச்சியா லுருப்பட்ட மக்க ளவ்விருவருடலினு மூறிச் சம்பந்தித்தலி னவர்கட்குரிய வடிவமு நோயு மிவர்கட்கும் வருதலன்றியுந் தேகசம்பந்தப் பிதிரா ளித்தேக நீங்கி யாதனா சரீரம்பெற்று மறுமைக்கண் வசித்தலினாலு, மவர்க ளினிவேறோர் பவுதிகவுடல் வருமளவுந் தமது விந்துசம்பந்தப் புத்திரர்கள் பலப்பிராப்திக் கெதிர்நோக்கி யிருத்தலினாலு, மிவர்கட்குரிய புண்ணிய பாவப்பய னவர்கட்கு முரித்தாதல்-ஆதலினிவற்றுட்டேக சம்பந்தத்தா லியக்குமென்க.

வினா.—இவர்களடைந்த கதி யவர்களுமடைய வேண்டுமே யெனின்.

விடை.—இவர் முத்திபெற்றபல னவர்கள் பௌதிக சரீரத்தோ டனுட்டித் திருந்த பலனை முற்றச்செய் தவர்களைச் சுவர்க்கத்திற் சேர்க்குமென்க.

"மாதா பிதாக்கள் செய்தது மக்களைச் சாருமென்ற" பழமொழிப்படி தேகசம்பந்தத்தால் வந்த ஜீவர்களான புத்திரபவுத்திரர்களால் வரு நன்மை தீமைகளிற் கிஞ்சித் தக்குலப்பிதிராளைச் சாருமென்பதினாற் பெற்றாம்.

(இ-ம்.) இத்தேகத்திற்றானே ஆதிவியாதியான பவத்துன்பத்தை இவனடைந்ததைக் கண்டனமென்பதாம். (அ)

(அ-கை.) தந்தை பரமாசாரியராதலா லிவனது துன்பந்தீரவாலோசித்தா ரெனல்.

(கவி.) தன்புத்திரனேயம் விடாமையினாற்
றவறுற்ற விவற்பெறு தந்தையுளந்
துன்புற்றினி யென்னை கொலோபுதல்வன்
றுயர்தீர்வகை யென்று சுழன்றனனே.

(இ-ள்.) தன்புத்திரனேயம் விடாமையினால் - தனது புத்திரவாஞ்சை நீங்காமையால், தவறுற்ற - கிரமந்தவறிய, இவற்பெறு - இவனைப்பெற்ற, தந்தையுளம் - பிதாவின்மனம், துன்புற்று - துன்பத்தையடைந்து, இனி - மேல், புதல்வன்றுயர் தீர்வகை - புத்திரனது துன்ப நீங்குமார்க்கம், என்னைகொலோவென்று - என்னவிதத்தாலோவென்று, சுழன்றனன் - கலங்கினன். எ-று. ஏ - ஈற்றசை.



(இ-ம்.) புத்திரனைச் சுகிக்கச்செய்தல் பிதாவிற்குக் கடமையாதலா லித்துன்பத்தை நீக்கும் விதியை யாலோசித்தா ரென்பதாம். (கூ)

(அ-கை.) ஆலோசித்த பின்ன ரிவனைக் கூட்டிக்கொண்டு தீர்த்தயாத்திரை செல்லுதல்.

(கவி.) ஒன்றாலும் வினைத்துயர் துய்ப்பதலா
லொழிவிக்கு முபாய முனற்கிலதே
யென்றாலு மறிந்தவ னன்புவிடா
திவனைக்கொ டுழன்றன னெங்கணுமே.

(இ-ள்.) வினைத்துயர் - தான்செய்த வினையினால்வருந் துன்பங்களை, துய்ப்பதலால் - தான்புசித்துத் தீரவேண்டுவதேயன்றி, ஒன்றாலும் - யாதொருத்தியினாலும், ஒழிவிக்குமுபாயம் - நீக்குகின்ற வுபாயம், உனற்கிலதேயென்றாலும் - சிந்தித்தற்கரிதென்கிலும், அறிந்து - இவன்படும் வேதனையை யறிந்து, இவனன்புவிடாது, இப்புத்திரன்மேல் வைத்த பிரியநீங்காமல், இவனைக்கொடு - இவனையழைத்துக்கொண்டு, உழன்றனனெங்கணும் - பெரியோர்கள் வசிக்குந் தலமெல்லாஞ் சுற்றினான். எ-று. ஏ - ஈற்றசை.

உன்னற்கென்றது உனற்கென இடைக்குறை யாயிற்று.

(இ-ம்.) இத்துன்பம் ஞானிகளாற் றீரவேண்டுமென் றறிந்தவர்க ளிருக்குமிடந் தேடின னென்பதாம். (க0)

(அ-கை.) அங்ஙனஞ்சென்ற விடத்துத் தெய்வகதியா லெதிருற்ற வாப்த ரிவனுக் கிவ்வியாதி வந்திருக்குங்காரணமு மது நீங்கும் பருவமுந் தெரிந் ததற்குரிய வவிடதங்கூறல்.

(கவி.) ஒருமாதவன் மற்றிவன் வேதனைகண்
டொழிவற்றுள வொன்றை யுளத்துணரும்
பரமாகிய ஞானிகள் கண்ணுறலே
பரமாவு ஷதமென்று பகர்ந்தனனே.

(இ-ள்.) ஒருமாதவன் - ஒருமகான், மற்றிவன்வேதனைகண்டு - இவனதுகொடிய நோயைப்பார்த்து, ஒழிவற்றுள - பரிபூரணமாயுள்ள, ஒன்றை - பரவஸ்துவை, உளத்துணரும் - அறிவினாலறிந்த, பரமாகிய - பிரமமாகிய, ஞானிகள் - ஞானவான்கள், கண்ணுறலே - தமதருட்கண்சாற்றலே, பரமாவுஷதமென்று - இவ்வியாதிக்குமேலான மருந்தென்று, பகர்ந்தனன் - சொன்னான். எ-று. ஏ - ஈற்றசை.

(இ-ம்.) தேடுற்றவிடத் தெதிருற்றவாப்த ரித் துன்பம் பூரணநோக்காற் றீரவேண்டுமென் றறிவித்ததாம். (கக)

(அ-கை.) அங்ஙனமுள்ள ஞானவா னிங்ஙன மிருக்கின்றானெனக் கூறல்.

(கவி.) தானந்தமிலாத தனைத் தருவான்
சத்தீச்சுரமென்னு மிடந் தனில்வாழ்
மானந்தி பராயண னென்பவனின்
மைந்தற்குறு நோய்க்கு மருந்தெனவே

(இ-ள்.) தானந்தமிலாத - ஆதிமத்தியாந்த ரகிதமான, தனை - தனதுசொரூபத்தை, தருவான் - அடியார்களுக்குக் கொடுப்பவன், சத்தீச்சுரமென்னுமிடந்தனில் - சத்தீச்சுரமென்னுந்தலத்தில், வாழ் - வசிக்கின்ற, மானந்திபராயண னென்பவன் - மானந்திபராயணனென்னு நாமத்தையுடையவன், நின்



மைந்தற்கு - உனதுபுத்திரனுக்கு, உறுநோய்க்கு - பொருந்திய வாதிவியாதியான பிணிக்கு, மருந்தென - அவுடதமென்று சொல்ல. எ-று. ஏ - ஈற்றசை.

(இ-ம்.) அறியாக்குறியுமறிகுறியுமுணாத்தனரொன்பதாம். ()

(அ-கை.) ஆப்த வாக்கியப்படி சென்று அந்த ஞானவானைக் கண்ணுற்றுத் தனையன தனுபவங் கூறல்.

(கவி.) முடியாவுப தேசமி தென்றிவனம்
முனிவன்பத மெய்தி மொழிந்தனனிக்
கொடியான்வெரு வாது குயிற்றியநோய்
கூறற்கரி தாய கொடுந் தொழிலே.

(இ-ள்.) முடியா வுபதேசமிதென்று - இவ்வுரை வரையற்ற வுபதேசமென்று, இவன் - இச்சாந்தசீலன், அம்முனிவன்பதமெய்தி - அம்மகான்பாதத்தையடைந்து, மொழிந்தனன் - சொன்னான், இக்கொடியான் - இக்கொடிதான வெனதுபுத்திரன், வெருவாது - பயப்படாமல், குயிற்றியநோய் - செய்தகிருத்தியங்கள், கூறற்கு - சொல்வதற்கு, அரிதாய - முடியாத, கொடுந்தொழில் - துர்க்கிருத்தியங்கள். எ-று. ஏ - ஈற்றசை.

(இ-ம்.) இவன் செய்ததுர்க்கிர்த்தியங்க ளளவில்லை யென்பது தோன்ற அவற்றைச்சுருக்கிக் காட்டினதாம். (கரு)

(அ-கை.) கூறவே யவரிவன் செய்தவினையி னபிப்பிராயமறிந்தருளோக்கஞ் சாற்றல்.

(கவி.) ஈங்குன் திருமுன் பகரும்படியோ
விவனெய்திய தீவினை யென்னவெலா
நீங்கும்படி தன்னனு பூதியினு
னிகழும்விழி வைத்தன னின்மலனே.

(இ-ள்.) ஈங்கு - இவ்விடத்தில், உன்திருமுன் - தேவர்சன்னிதியில், பகரும்படியோ - சொல்லத்தக்கதோ, இவனெய்திய - இவனடாத்திய, தீவினையென்ன - கொடியதீவினைகளேயென்றுசொல்ல, எலாம் - சஞ்சிதாகாமியங்களால் வருநல்வினை தீவினைகளனைத்தும், நீங்கும்படி - விட்டுநீங்கும்படி; தன்னனுபூதியினால் - தனது சுவானுபூதியினால், நிகழும் - விளங்குகின்ற, விழிவைத்தனன் - கிருபாநோக்கம் வைத்தனன், நின்மலன் - களங்கமற்றவன். எ-று. ஏ - ஈற்றசை.

(இ-ம்.) இஃதவனது பக்குவம்பார்த் தருட்கண் சாற்றினதறியுந் திருவடிதீட்சை யென்பதாம். (கஉ)

(அ-கை.) இந்நோக்கத்தா னுதிவியாதியிரண்டு நீங்க வதனைத் தந்தைகண்டு தனதிடத்திற் கேகுதல்.

(கவி.) கணியாத பவக்கடு வானதிருக்
கண்வைத்தலும் விட்டன காதுகடும்
பிணியாவையு நல்லபிதா விறைதாட்
பேணிப்பணி யென்று பெயர்ந்தனனே.

(இ-ள்.) கணியாத - கணித்தற்கரிய, பவம் - பவப்பிணிகட்கு, கடுவான - விடம்போன்றுள்ள, திருக்கண்வைத்தலும்-கிருபாநோக்கம் வைக்கவும், காது - வருத்துகின்ற, கடும்பிணி



யாவையும் - கொடியசஞ்சிதவினையுந் தேகவியாதிகளுமாகிய வனைத்தும், விட்டன - அவனைவிட்டு நீங்கின (அதனைக்கண்டு,) நல்லபிதா - சன்மார்க்க தந்தையானவன், இறைதாள் - இந்த மகானது திருவடியை, பேணிப்பணியென்று - அன்புற்று வணங்கி நிற்பாயென்று, பெயர்ந்தனன் - அவனைவிட்டுத் தன் பதிக்கேகினன். எ - று. ஏ - ஈற்றசை.

(இ-ம்.) அவ்வறியுந் திருவடி தீக்கையா லெய்தியபயனைத் தந்தைகண்ணுற்றுத் தன்பதிக்கேகின னென்பதாம். (கரு)

(அ-கை.) தந்தை வாக்கியப்படி யாசிரியர் தொண்டின் மிக்கானுயினனெனக் கூறல்.

(கவி.) இடனே முதலாக வுவந்திறையோ
னேவும் பணிசெய் திவனுஞ்சிலநா
ளுடனேயிவனத் திருமே னிதனக்
குரியானென வுற்றன னும்பனொடே.

(இ-ள்.) இடனேமுதலாக - இங்ஙன மாசிரியர்க்கடிமையாப் பிதாவிடுத்துப் போனநாள்முதல், உவந்து-மனமகிழ்ந்து, இறையோன் - ஆசிரியர், ஏவும்பணி - ஏவியபணிவிடைகளை, இவனும் - இச்சசிவன்னனும், சிலநாள்செய்து - சிலதினஞ்செய்து, உடனே - அப்போதே, இவன் - இச்சசிவன்னன்; அத்திருமேனிதனக்கு - அவ்வாசிரியர் திருமேனிக்கு, உரியானென - உரியவனென் றுலகுணாக்கும்படி, உற்றனனும்பனொடே- அருளிறையோடு தேகமுஞ் சாயையும்போலப் பொருந்தினர். எ-று. ஏ - ஈற்றசை.

(இ-ம்,) ஆசிரியர்பணியின் முதிர்ந்தனனென்பதாம். (கசு)

(அ-கை.) அக்குருபணி மேலீட்டாற் சாதன சதுஷ்டய முதயமாயிற்றெனக் கூறல்.

(கவி.) நன்றாமுனி தாள்வழி பாடதனா
னானாவித மான பிறப்பினைவிட்
டொன்றாகிய வீடுண ருத்தமர்கட்
குளசாதன நாலு முதித்தனவே.

(இ-ள்.) நன்றாம் - செவ்வையாகிய, முனிதாள் - ஆசிரியரது திருவடியின், வழிபாடதனால் - வழிபாட்டினால், நானாவிதமான - பலவிதமான, பிறப்பினைவிட்டு - பவங்களை நீங்கி, ஒன்றாகியவீடு - தனிமையான நிருவாணபதத்தை, உணருத்தமர்கட்கு - அறியுஞானிகளுக்கு, உளசாதனநாலும் - உரியசா ன சதுஷ்டயங்கள், உதித்தன - தாமேயுண்டாயின. எ- ஏ - ஈற்றசை.

(இ-ம்.) வெளிப்படை. (க

(அ-கை.) அச்சாதன மேலீட்டாற் றனதவிப்பிராயத்தை குறிப்பித்தல்.

(கவி.) முனிவன்றிரு முன்புள தன்குறைதான்
மொழிவன்சில வஞ்சலி குஞ்சியதாய்ப்
பணிவந்திரு கண்கள் பதங்களிலே
பலகால்வலம் வந்து பணிந்திடவே.

(இ-ள்.) முனிவன்றிருமுன்பு - ஆசிரியராகிய சன்னிதானத்தில், உளதன்குறை - தனக்குள்ள குறைவுபாட்டை, மொழிவன்சில - சிலசொல்லுவன், அஞ்சலிகுஞ்சியதாய் - சிரசிற்



கைகுவித்துக்கொண்டு, பணிவந்திருகண்கள் - இரண்டுகண்களிலு மானந்தபாஷ்பம்பெருகி, பதங்களிலே - ஆசிரியர் திருவடிகளில், பலகால் - பலதரம், வலம்வந்து - பிரதக்ஷணம்வந்து, பணிந்திட - வணங்க. எ-று. ஏ - அசை.

(இ-ம்.) தீர்த்த யாத்திரையாற் சித்தசுத்தியு மச்சித்த சுத்தியினாற் குற்றேவலு மக்குற்றேவலாற் சாதனசதுஷ்டயமு மச்சாதன சதுஷ்டயத்தாற் பவத்துன்பமு மப்பவத்துன்பத்தா லஃதுநீங்கும்பக்குவமு மெய்தினவென்பதாம். (கஅ)

(அ-கை.) சீடனது பக்குவத்தைக் குறிப்பினறிந்ததனை வெளிப்படையாக்குநிமித்தந் தெரியாதவர்போல் வினாதல்.

(கவி.) அருளே வடிவாகிய மாமுனிதா
னறியாதவர் போல வழுங்கலுறும்
பொருளேதென மைந்த னடுங்கினனிப்
பொல்லாத பவப் புணரிக்கெனவே.

(இ-ள்.) அருளே - பிரம காருண்ணியமே, வடிவாகிய - ஓர் சொரூபமாகி வந்த, மாமுனிதான் - மானந்திபராயணர், அறியாதவர்போல - இவன் பக்குவந்தெரியாதவர்போல, அழுங்கலுறும் - மனவருத்தப்படும், பொருளேதென - பொருள் யாதென்றுகேட்க, மைந்தன் - சீடனான சசிவன்னன், இப்பொல்லாதபவப்புணரிக்கு - இந்தக் கொடிய பவசமுத்திரத்திற்கு, நடுங்கினன் - பயந்தேன், என - என்றுசொல்ல. எ-று. ஏ - அசை.

(இ-ம்.) பவத்துன்ப நீங்கு நிமித்த மதனை வெளிப்படுத்தினனென்பதாம். (க௯)

(அ-கை.) பவத்துன்ப மதிகரிக்கு நிமித்தம் பவத்தைச் சாகரமாக வுருவகப்படுத்திக் கூறத் தொடங்கல்.

(கவி.) வெருவும் பிறவிக்கடல் வித்தரமுன்
வேதாகம கீதைவிளம்பு மதைக்
குருவுங் தனதன்பன் மனத்தளவிற்
கொளுமாறு தொகுத்திது கூறிடுமே.

(இ-ள்.) வெருவும் - பயப்படத்தக்க, பிறவிக்கடல் - பவசமுத்திரத்தின், வித்தரம் - விலாசத்தை, முன் - முன்னமே, வேதம் - வேதங்களும், ஆகமம் - ஈசுரவாக்கியமான வாகமங்களும், கீதை - அரிபிரமராற் சொல்லப்பட்ட கீதைகளும், விளம்பும் - சொல்லும், அதை - அவ்விஸ்தாரத்தை, குருவும், ஆசிரியரும், தனதன்பன் - தனதுசீடனது, மனத்தளவில் - மனதிற் கொள்ளத்தக்க தெவ்வளவோ அவ்வளவு, கொளுமாறு - ஏற்கும்படி, தொகுத்து - சுருக்கி, இதுகூறிடும் - இதனைச் சொல்லுவர். எ-று. ஏ - அசை.

மனத்தளவி லென்பது இம்மனமித்துன்ப மொறுக்குமளவுமெனக்கொள்க.

(இ-ம்.) பவத்துன்பத்தை யினித்தாங்கச் சத்தி யில்லையென்றறிகிற பரியந்தம் பகுத்துக் கூறத்தொடங்கினதாம். (உ0)

(அ-கை.) இக்கவிமுதலைந்துகவியாற் பவத்தைச் சாகரமென்றதற்குரிய வங்கங்க ளிணையவெனக் கூறல்.

வேறு.

(கவி.) மரணபவங்க ளானபுனலை யுடையது
மதியைவிழுங்குகாம வரவு பெரியது
கரணவொழுங்க ருதுவிடயவிளைறுகர்
கணமொடியக்குமீன மிகவு முகள்வதே.



(இ-ள்.) மரணபவங்களான - சனனமரணங்களாகிய, புனலையுடையது - சலத்தையுடையது, மதியைவிழுங்கு - அறிவைவிழுங்குகின்ற, காமவரவு - காமமென்னும் பாம்பு, பெரியது - மிகப்பெரியது, ஒழுங்கறுத - இடைவிடாதுள்ள, விடயவிளைறுகர் - விடயமாகிய விளைகளைத் தின்னுகின்ற, கரணம் - கரணமென்னும், கணமொடியங்குமீனம் - கூட்டங் கூட்டமாகத் திரிகின்ற மச்சங்கள், மிகவுமுகள்வது - மிகவுங்குதிக்கின்றன. எ-று. ஏ - அசை.

உகள்வது - தொகையொருமை, இங்கே கரணமென்றது அகக்கரண புறக்கரணங்களை. (உக)

அவதாரிகை. இதுவுமது.

(கவி.) பெருமிதமென்று கூறுபெருமை யுடையது
பிணிகளெனுங் கெடாதபுலவு கமழ்வது
வருமிடரின்பமான திரைகள்பொருவது
மனமெனும் வஞ்சராச மகரமுறைவதே.

(இ-ள்.) பெருமிதமென்று - மதக்களிப்பென்று, கூறும் - சொல்லும், பெருமை யுடையது - மாட்சிமை யுடையது, பிணிகளெனும் - வியாதிகளென்கின்ற, கெடாத - நசியாத, புலவுகமழ்வது - நாற்றம் வீசுகின்றது, வருமிடரின்பமான - மாறிமாறி வருஞ் சுகதுக்கங்களான, திரைகள் பொருவது - அலைக ளடிக்கின்றது, மனமெனும்-மனமென்கின்ற, வஞ்சம் - கபடமுள்ள, ராசமகர முறைவது - தலைமையான மகரமச்சம் வசிக்கின்றது. எ-று. ஏ - அசை.

மனமெனுமந்த ராசமகர மெனப்பாட மோதுவாரு முளர். (உஉ)

அவதாரிகை - இதுவுமது.

(கவி.) அளவிலகந்தையாமை யபரி மிதமுள
வவாவெனிறந்த வாழ மறியவரியது
களவுநெருங்குபாரு மலையுமுடையது
கலசவிடங்கண் மேவு கிரிமிநெளிவதே.

(இ-ள்.) அளவிலகந்தை - வரையின்றிய வகம்பாவமென்னும், ஆமை யபரிமிதமுள - ஆமைக ளனேகமிருக்கின்றன, அவாவென் - அவாவென்கின்ற, இறந்த - அளவிறந்த, ஆழம் - ஆழமானது, அறியவரியது - அறிதற்கரியது, களவு - களவென்னும், நெருங்கு - நெரிங்கிய, பாருமலையு முடையது - பார்களையு மலைகளையு முடையது, கலசம் - கலசமென்னும், விடங்கள் மேவு - விடங்கடங்கிய, கிரிமிநெளிவது - புழுக்கணெளிகின்றன. எ-று. ஏ - அசை. (௨௩)

அவதாரிகை - இ-து.

(கவி.) துகளெனுநன்கிலாத நுரைகடருவது
துறவினினின்பமான கரையைவிடவகல்
மகளிரெனுந் தவாதவலிய சுழியது
மறலியுமஞ்சுகோப வடவை யெரியதே.

(இ-ள்.) துகளெனும் - குற்றமென்கின்ற, நன்கிலாத - கிஞ்சித் நன்மையில்லாத, நுரைகள் - நுரைகளை, தருவது - தந்துகொண்டே யிருப்பது, துறவினில் - சகலத்தியாகத்தின் கண்ணெழும், இன்பமானகரையை - நிரதிசயாநந்தக்கரையை, விட - விட்டுவிட, அகல் - விலக்குகின்ற, மகளிரெனும் - ஸ்திரிகளென்னும், தவாத - நீங்காத, வலியசுழியது - கொடிய சு



ழியையுடையது, மறலியுமஞ்சு - யமனுநடுங்கத்தக்க, கோபம் - கோபமாகிய, வடவையெரியது - வடவானலத்தை யுடையது. எ-று. ஏ - அசை. (௨௪)

அவதாரிகை. இ - து.

(கவி.) வெருவருகின்றபோக முதலை யடர்வது
விவிதமனந்த மானதுறையு மறிபவ
ரொருவர்கடந்து போகவிரகி லெழுபவ
வுததிவிளம்ப யாவருலகி லறிவரோ.

(இ-ள்.) வெருவருகின்ற - அஞ்சத்தக்க, போகம் - செல்வமென்னும், முதலையடர்வது - முதலைகள் நிறைந்திருக்கின்றன, விவிதம் - நானாவிதமான, அனந்தமான - அளவின்றிய, துறையும் - மார்க்கங்களையும், அறிபவர் - அறிகின்றவர்களில், ஒருவர் - ஒருவராவது, கடந்துபோக - இக்கடலைக் கடந்துசெல்ல, விரகில் - யுத்தியில்லை ஆனால், எழுபவவுததி, எழுபிறப்பென்னுங்கடலினளவை, விளம்ப - யாஞ்சொல்ல - உலகின் - இவ்வுலகின்கண், யாவரறிவர் - எவரறிவார்கள். எ - று. ஏ - அசை.

இவ்வைந்துகவியின்குறிப்பரியம்.

சீடனை அகமுகப் படுத்தப் பவத்துன்பத்தின் பயங்கரத்தைப்பகுத்துக் கூறியதாம். (௨௫)

(அ-கை.) பவக்கடலின் தீமையைக் கூறி யஃது நீங்குங் கருவியு நீங்காக் கருவியு மிஃதெனக்கூறல்.

(கவி.) பொறிவழிசென்றுமீளு மவலமதிகொடு
பொருசமயங்களாறு மறியவிழுமதி
லறிவழிவொன்றிலாத பொருளதெனவுள
வனுபவவங்கமேறு மறிஞரகல்வரோ.

(இ-ள்.) பொறிவழி - இந்தியங்கள்வழியாய், சென்றுமீ ம் - போக்குவரத்துள்ள, அவலமதிகொடு - ஐயந்திரிபரும் த்தியென்னுந் தெப்பத்தைக்கொண்டு, பொரு - பொருணி யத்தா லொன்றற்கொன்று முரணுகின்ற, சமயங்களாறு ஆறுசமயத்தார்களும், அறிய - முத்தியடைவான் வேண் காண, விழுமதில் - பிறவிக்கடலில்விழுவார்கள், அறிவு திவானது, அழிவொன்றிலாத - அழியாத, பொருளதென ரமவஸ்துவெனச் சுருதியுத்திகளா னிச்சயிக்க, உள - அ ர்சமாதியின் கண்ணுண்டான, அனுபவ வங்கமேறும் - னுபவமென்னுங் கப்பலிலேறிய, அறிஞரகல்வர் - அறி யோரக்கடலைக் கடப்பர். எ-று. ஏ - ஈற்றசை.

அவலம் - பயனின்மை, அதாவது ருபாருபங் ... ர மினையதெனத்தேராமை.

(இ-ம்.) தன்னை விகற்பித்துக் காண்பார் பவக்கட ... தற்கேதுவாயது சங்கற்பங்களை யெட்டியறியாத ... யெனவும், விகற்பங்கடோறுந் தன்னைக்காண்பா ரப் ... ர்கரையேறுதற் கேதுவாயது தனதுவியாபக விளக்க ... லவ்விசற்பங்கள் கிஞ்சித்துந் தோற்றுத வனுபவ வ ... வுங் கூறியதாம்.

(அ-கை.) முற்கூறிய வுத்திகளின் முன் கூட ... மேற்கூடு மென்பதையும் வற்புறுத்திக் கூறுதல்.

(கவி.) புணரிகடந்துபோக விரகிலெனமொழி
பொழுதுபுலம்பியாவி புதல்வனிறு
முணர்வெனும்வங்கமேறு மறிஞரகல்
றுரையைவழங்கிநாத னுவகையரு



(இ-ள்.) புணரிகடந்து - பவக்கடலைக்கடந்து, போக - சம யமார்க்கங்களா லறியு முத்தியாகிய கரையைச்சேர, விர கிலென - யுத்தியில்லையென்று, மொழிபொழுது - சொன்ன மாத்திரத்தில், புலம்பி - நாமென்செய்வோமென்றழுது, ஆ விபுதல்வன் - சீடனுயிரானது, இறுமுனம்-விசனத்தினுற் பிரி வதற்குமுன், உணர்வெனும்வங்கம் - ஞானமாகிய கப்பலில், ஏறுமறிஞர் - ஏறுமகான்கள், அகல்வரொன்று-கடப்பார்களெ ன்று, உரையைவழங்கி - சொல்லைச்சொல்லி, நாதன் - குரு நாதன், உவகையருள - சீடனுக்குச்சந்தோஷம் விளைக்க. எ.று. ஏ - ஈற்றசை.

(இ-ம்) பிராணுபாயமான பயத்தைவருவித்துச் சாம்பிரா ச்சியமான பதத்தையடையுஞ் சந்தோஷத்தையு முடனே தோ ன்றச்செய்தனரொன்பதாம். (உஎ)

(அ-கை.) ஆசிரியர் சொல்லிய மகிழ்ச்சியினுற் பவத்துன்ப நீங்கிப் பரமசுகத்தையடையும்பொருட்டு ஞானுனுக்கிரகஞ் செய்யவேண்டுமென வினுதல்.

வேறு.

(கவி.) வாழியெனவிறைவனடி தொழுதுவருபவமா
மாழியினையகலுமறி வருளுகெனவவரோ.

(இ-ள்.) வாழியென - தேவரீ ரெப்போதும் வாழக்கடவ தென்று, இறைவனடி தொழுது - குருபதத்தைப்பணிந்து, வருபவமாமாழியினை - அடியேனுக்கு மாருது வந்துகொண்டி ருக்கும் பவக்கடலை, அகலுமறிவு - நீங்குதற்கேதுவான ஞா னத்தை, அருளுகென - அநுக்கிரகிக்கவேண்டுமென்று சீட னிரக்க, அவர் - அதற்கவ்வாசிரியர், எ-று. ஏ - ஈற்றசை.

(இ-ம்.) வெளிப்படை. (உ௮)

அ-கை. சீடன் வினுவிற் குத்தரங் கூறத்தொடங்கி ஞான வகையினைய வெனக் கூறல்.

(கவி.) பரவறிவு மபரவறி வெனவுமிரு பரிசாந்
திரவறிவை யறியுமவர் மொழிவர் தெளிவுறவே.

(இ-ள்.) பரவறிவு - பரஞானமெனவும், அபரவறிவெனவும்-அபரஞானமெனவும், இருபரிசாம் - இரண்டு தன்மையாக விளங்கும், திரவறிவை - திரமான சகசஞானத்தை, அறியுமவர் - அனுபவமாயறியுஞ் சத்துக்கள், மொழிவர்தெளிவுற - இவற்றைத் தெளிவாகச் சொல்லுவர். எ-று. ஏ - ஈற்றசை.

(இ-ம்.) சாக்ஷாத்கார ஞானமேதன் வடிவெனக் காணுகிமித்த மறிவின் தொகுப்பைப் பகுத்துக் கூறினதாம். (உ௯)

(அ-கை.) முற்கூறியஞானவகையின் றன்மையைக்கூறல்

(கவி.) அபரவுணர் வருமறை கண் முதலகில கலையு
முபரமம தறவுதவு முணர்வு பரவுணர்வே.

(இ-ள்.) அருமறைகண்முதல் - உணர்தற்கரியவேதங்கண் முதலிய, அகிலகலையும் - சகலவித்தையாஞானமுமாம், அபரவுணர்வு - அபரஞானமானது, உபரமமது - அந்தப்பிரம சொரூபத்தை, அற - மிகவும், உதவும் - தானெனத்தரும், உணர்வு - யதார்த்தஞானமான, பரவுணர்வு - பரஞானமாவது எ-று.

சகல வித்தை யென்றது இருக்கு எசுர் சாமம் அதர்வணம், அங்கம் ௬, சாத்திரம் ௬ என்னுமிப்பதினுன்கையும்.



(இ-ம்.) விசாரத்தா லுதிப்ப தபரஞானமெனவுஞ் சமாதியின் கண் விளங்குவது பரஞானமெனவுங் கூறப்படுமென்பதாம். (௩0)

(அ-கை.) முற்கூறிய பரஞான மபரஞானமென்னு மிரண்டனு ளபரஞானத்தி னபிப்பிராயந் தெரிந் தொருவ ரோத வேண்டுமெனல்.

(கவி.) புராணமிதி காசமெவை யும்பொரு ளனைத்தின்
பிராணனறி யாதுள விடத்திவை பிதற்றே.

(இ-ள்.) புராணம் - பதினெண் புராணங்களிலும், இதிகாசம் - பாரதாதி யிதிகாசங்களிலும், எவையும் - இவைபோன்ற மற்றெந்நூல்களிலுஞ் சொல்லுகின்ற, பொருளனைத்தின் - எல்லாப் பொருள்களின், பிராணன் - உயிர்ப்பான வபிப்பிராயத்தை, அறியாதுளவிடத்து - தெரிந்துகொள்ளாதவிடத்தில், இவை - படித்துக்கொண்ட விவையாவும், பிதற்று - முன்பின்கெட்ட பிதற்றலாகமுடியும். எ-று.

(இ-ம்.) நூல்களிற் கூறு முபக்கிர மோப சங்காரங்களி னபிப்பிராய நன்குய்த் தெரியி னவற்றின் பயனுகிய வபரஞான முதிக்குமென்பதாம். (௩க)

(அ-கை.) இவ்விருவகை யுணர்வடைந்தோ ரிங்ஙன முள்ளாரொனல்.

(கவி.) ஆகம விதங்களறி வாரபர மறிவார்
யோகமொ டுறங்குமவ ரோபர முணர்ந்தார்.

(இ-ள்.) ஆகமவிதங்களறிவார் - வேதங்களிற் கூறும் பலவிதமான பொருள்களைத் தெரிந் தொன்றுபடுத்து நிச்சயஞானிகளே, அபரமறிவார் - அபரஞானமுணர்ந்தோராவர், யோகமொடுறங்குமவரோ - பிரமத்தி லொன்றுபடச்செய்யுஞ் சமாதிஞானிகளே, பரமுணர்ந்தார் - பரஞானமுணர்ந்தவராவர். எ-று.

(இ-ம்.) வேதாகமங்களிற் கூறியமரபின்படி கலாசோதனை செய் ததனுற் சேடித்த வஸ்துவே பரமென நிச்சயமாகத் தெரிந்தவ ரபரஞானிகளெனவும்; அப்பரத்தோடடங்குஞ் சமாதிஞானிகளே பரஞானிகளெனவும் பொருள்படக் கூறியதாம்.

(அ-கை.) ஞான மினையதெனவு மஞ்ஞான மினையதெனவும் விளக்கல்.

(கவி.) இயலறிவ திசையறிவ தினமறிவ துளதா
மயலறிவ தறிவதல வறிவறிவ தறிவே.

(இ-ள்.) இயலறிவ திசையறிவ தினமறிவது - இயலிசைநாடகமென்னு முத்தமிழையுந்திரவறிவது; உளதாம் - உண்டாயிருக்கும் (ஆயினுமஃது;) அயலறிவது - தன்னைவேருயறிவதேயன்றி, அறிவதல - தன்னையுள்ளவாறறியு ஞானமல்ல, அறிவறிவது - அறிவு கற்பிதமின்றித் தன்னைத்தானுகவறிவது, அறிவு - யதார்த்தஞானமாம். எ-று. ஏ - அ-சை.

(இ-ம்.) எதிரிட்ட விடய ஞானத்தை யறிவ தஞ்ஞானமெனவு, மெதிரீடின்றித் தன்னைத்தானுயறிவது திரஞானமெனவுங் கூறியதாம். (௩௩)



(அ-கை.) கலைவல்லோ ரேனும் பிரமத்தி னுண்மைநிலை யறியப்படாதெனல்.

(கவி.) நவிலுகலை யறுபத்து நாலுமறி வாரும்
பவலயம தறுசுத்த பரமமறி யாரோ.

(இ-ள்.) நவிலு - சொல்லப்பட்ட, கலையறுபத்து நாலும்-அறுபத்து நாலுகலைஞானங்களையும், அறிவாரும் - தெரிந்தபேர்களும், பவலயமதறு - உற்பத்திநாசமில்லாத, சுத்தபரமமறியார் - சுத்தப்பிரமத்தை யறியமாட்டார்கள். எ-று. ஏ - அசை.

(இ-ம்.) எல்லாந் தெரிந்துகொண்ட தன்னைத் தெரிந்து கொள்ளாமையா னிஃதும் விடய ஞானமே யன்றிப் பரஞானமன்றென்பதாம். (௩௪)

(அ-கை.) ஞானுஞ்ஞானதிசையிற் புலப்படாததும் புலப்படுவது மினையவெனக் கூறல்.

(கவி.) ஆகவறி வாளரறி வாரிவை யனைத்து
மேகவறி வாளரிவை யாவுமறி யாரோ.

(இ-ள்.) ஆகவறிவாளர்-தேகோகமென்னும் விடயஞானிகள், அறிவா ரிவையனைத்தும்-இங்ஙன மதுவிது வெனச் சுட்டத் தகுவன வனைத்தையு மறிவார்கள், ஏகவறிவாளர்-பூரணஞானமுடையோர், இவையாவுமறியார் - சுட்டுப்பொருளாகிய விவையனைத்தையு மறியமாட்டார்கள். எ-று. ஏ - அசை.

(இ-ம்.) ஞானுஞ் ஞானத்தின் றன்மை யிஃதெனத்தெரிவித்ததாம். (௩௫)

(அ-கை.) பரஞானத்தை நீக்கித் திரஞானத்தை நிரூபித்தல்.

(கவி.) ஐயறிவறிந்தவை யடங்கினவரோனு
மெய்யறிவிலாதவர்கள் வீடதுபெருரோ.

(இ-ள்.) ஐயறிவு - பஞ்சேந்திரியமென்னு முணர்வை, அறிந்து - உள்ளவாறவற்றி னியல்பாற்றெரிந்து, அவை - அப்பஞ்சவுணர்வு, அடங்கினவரோனும் - தம்முணசிக்கக்கற்ற ஞானிகளாயினும், மெய்யறிவிலாதவர்கள் - ஐக்கியமான திரஞானமில்லாதவர்கள், வீடதுபெருர் - முத்தியடையார். எ-று.

(இ-ம்.) கூடத்தப் பிரமமென்னும் பேத நீங்கிச் சுயமாய் விளங்கு ஞானமே வஸ்துவாதலி னதனைத் திரஞானமெனக் கூறினு ரென்பதாம். (கூசு)

(அ-கை.) முன்னர் பரஞான மபரஞானமென்ற விரண்டையு நீக்கித் திரஞானமாவ தினையதெனக் கூறல்.

(கவி.) பூசனையுமதுசகல பொருளுமறிதமையு
மீசனையும்வேறதற வறிவதறிவெனலே.

(இ-ள்.) பூசனையும் - ஆராதித்தலையும், அது சகலபொருளும் - அதற்கு வேண்டிய தேனுதிய திரவியங்களையும், அறிதமையும் - சிவத்தைத் தியானிக்கின்ற வான்மாவாகிய தம்மையும், ஈசனையும் - ஆராதித்தலை யேற்கத்தக்க சிவத்தையும், வேறதற - பேதமின்றி, அறிவது - தானய்விளங்குவது, அறிவெனல் - சுயஞ் சைதன்னிய மெனப் படுவதாம். எ-று.

(இ-ம்.) அது விது வென்னுஞ் சுட்டின்றி யாவுந் தன்மயமாய் விளங்குவதே திரஞான மென்பதாம். (கூஎ)



(அ-கை.) முற்கூறிய ஞானத்தையே வற்புறுத்திக் கூறுதல்.

(கவி.) மெய்ம்மையறிவல்லதமில் வேறறிவதெல்லாந்
தம்மையறியும்மறிவ தேயறிவுதானே.

(இ-ள்.) தமில் - தமக்கு, வேறறிவதெல்லாம் - புறம்பாயறியப்பட்ட யாவும், மெய்ம்மை யறிவல்ல - சுயஞ்சித்தல்ல, தம்மையறியும் - தன்னைத்தானு யறிகின்ற, அறிவதே - அத்திரஞானமே, அறிவுதான் - தானுகிய ஞானமாம். எ-று.

மெய்ம்மை யறிவல்லவென்றது மித்தையான வஞ்ஞானத்தை.

(இ-ம்.) சர்வம் பிரமமய மிஃதவை யன்றென்னும் பிரமோபதேசப்படிசேவேசுரகூடத்தப் பிரமாதியான சகலத்தையுநீக்கிச் சேடித்துநின்ற ஞானமே தன்மய ஞானமென உபதேசித்தா ரென்பதாம். (கூஅ)

(அ-கை.) தம்மையறியும் மறிவதே யறிவுதானே யென்றதைக் கேட்ட மாணக்க னிஃதுண்மையாயி னெல்லாருந் தன்னைத்தா னறிந்தவர்களாக வேண்டுமே, யறிந்தவர்களாயிற் சுகதுக்கத்திற் பரதபித்துக்கொண்டு சரிதாதி சற்கிருத்தியங்களை யூணுறக்கங்களிற் சிரத்தையின்றி யரிய தவத்தான் மெலிந்து மியற்றுவானே னியற்றுதலி னிவ்வுடலைத் தானெனப்படுவது ஞானமன்ருமையிற் ருனென்பதற்குப் பொருள்வேறுண்டு போற் ரேற்றுகின்ற திவ்வையத்தை யகற்றவேண்டுமெனக் கேட்டல்.

(கவி.) தானெனுமுடம்பிது தனைத்தவிரவேரு
யானெனுமருத்தமுள வோவருளுகெனவே.

(இ-ள்.) தானெனும் - யாவருந்தானென்று சொல்லும், உடம்பிது தனைத்தவிர - இத்தேகத்தை யன்றி, வேருய் - வேருக, யானெனும் - தானென்கிற, அருத்தமுளவோ - பொருளுண்டோ, அருளுகென - அனுக்கிரகஞ் செய்யவேண்டுமெனச் சிடனிரந்து கேட்க. எ-று.

(இ-ம்.) தனக்கனுபவமாயுள்ள தூலதேகத்தை யன்றித் தானென்ப தற்குப் பொருள் வேறு கண்டில னுளதாயி னிருக்கக் காட்டவேண்டு மென்பதாம். (௩௧)

(அ-கை.) அதற்காசிரிய ருத்தம் வேறுண்டெனத் தோன்ற விதனைக்களைவான் வேண்டி யித்தூலதேகம் கிழமை, அசேதனம், அகர்த்தத்துவம், அசுத்தம், சடம், போலியியக்கம், அன்னியம், பௌதிகமென்னு மிக்குணங்களை யேற்கப் பாலதென்றுணர விக்கவியிற் கிழமையாங்குண முணர்த்தல்.

(வேறு.)

(கவி.) எனதாடைபொன்பூ மகன்றையல் பாய்மா
விபங்கண்முகங்கால்கை மெய்யென்னவென்றுந்
தனதாயுரைப்பான் வகுத்திந்தவூனைத்
தானென்றயர்த்துஞ் சொலத்தக்கதன்றே.

(இ-ள்.) எனது - என்னுடைய, ஆடை - வஸ்திரம், பொன்- தனம், பூ - நிலம், மகன் - புத்திரன், தையல் - பெண்சாதி, பாய்மா - தாவுகின்றகுதிரை, இபம் - யானை, கண் - கண்கள், முகம் - முகம், கால் - கால்கள், கை - கைகள், மெய் - உடம்பு, என்ன - என்று, வகுத்து - வேறுபிரித்து, என்றும் - எப்போதும், தனதாயுரைப்பான் - ஒருவன் தன்னுடையதாகச் சொல்லுவன், (ஆதலின்) இந்தவூனை - இந்தமாமிசவுடலை, தானென்று - தானாக, அயர்த்தும் - மறந்தும், சொலத்தக்கதன்று - சொல்லத்தக்கதல்ல. எ-று.



ஆடையாதியிபமீறு - பிறிதின்கிழமை; கண்ணுதிமெய்யீறு- தற்கிழமை.

(இ-ம்.) எனதெனப்படுதலினித்தேகந்தானன்றென்பதாம்.()

(அ-கை.) அசேதனமாங் குணமுணர்த்தல்.

(கவி.) தாளாகவூராழி யார்வெந்நில்வீணைத்
தண்டாகவன்மார்பு தட்டாகமொட்டா
நாளாமலர்ச்சென்னி கூந்தற்கொடித்தேர்
நாணளுமூர்வானின் வேருகநாடே.

(இ-ள்.) தாள் - கால்கள், ஊராழியாக - ஊருஞ்சக்கரமாகவும், வெந்நில் - முதுகிலுள்ள, வீணைத்தண்டு - முதுகெலும்பு, ஆராக - ஐந்நுருவாணியாகவும், வன்மார்பு - வலியமார்பானது, தட்டாக - பீடமாகவும், நாளாமலர் - அன்றலருந் தாமரை மலர்போன்ற, சென்னி - சிரசு, மொட்டா - தாமரையரும்பு போன்ற சிகரமாகவும், கூந்தல் - சிரமயிர், கொடி - கொடியாகவு மிருத்தலின், தேர் - இத்தேகரதமானது, நாணளும் - அனுதினமும், ஊர்வானின் - நடத்துவோனுக்கு, வேருகநாடு- அன்னியமாகக் காணுதி. எ-று.

இவ்வங்கங்களாற் றேருக்கொத்து நிற்றலி னிவ்வுடலைத் தேரெனவும், ரதாரூடனுக்கு ரதம்போன் ரூன்மாவுக் குடலன்னியமாக நிற்றலி னூர்வானின் வேறெனவுங் கூறினர்; கூறவே யித்தேக மருத்தாபத்தியா லசேதனமென்பது பெற்ரும்.

(இ-ம்.) தேக மசேதனமெனவுந் தேகிசேதனனெனவுங் கூறியதாம்.

(௬௧)

(அ-கை.) அகர்த்தத்துவமாங் குணமுணர்த்தல்.

(கவி.) கடக்குஞ்சரம்பண்ணி யுண்ணின்றொருத்தன்
கைபாதகன்னங்கள் மெய்போலியக்குங்
கிடக்குந்நடத்தா விடத்திவ்வுடம்புங்
கிடக்கும்மொருத்தன் னடத்தாவிடத்தே.

(இ-ள்.) கடக்குஞ்சரம்பண்ணி - மூங்கில் முதலியவற்றால் மதயானைபோலச் செய்து, உண்ணின்றொருத்தன் - ஒருவனுள்ளே புகுந்துகொண்டு, கை - தும்பிக்கையையும், பாதம் - கால்களையும், கன்னங்கள் - காதுகளையும், மெய்போல் - நிசம்போல, இயக்கும் - அசைப்பன், நடத்தாவிடத்து - அவனசைக்காதபோது, கிடக்கும் - அதுவறிதிருக்கும், (அதுபோல) இவ்வுடம்பும் - இத்தேகமும், ஒருத்தன் - ஒருபுருடன், நடத்தாவிடத்து - அசைக்காதபோது, கிடக்கும் - சவமாகப்பூமியில் விழுந்து கிடக்கும். எ-று.

இதனால், அசைவாதிகட்குப் போலியானைபோன்று வசனாதிகட்கித் தூலவுடல் கர்த்தத்துவ மன்றென்பது பெற்றாம்.

(இ-ம்.) எல்லாச் சேட்டைகட்குங் கர்த்தத்துவந் தேகியேயன்றித் தேகமன்றென்பதாம்.

(௬௨)

(அ-கை.) அசுத்தமாங் குணமுணர்த்தல்.

(கவி.) ஒருகூறுமனமாகு மொருகூறுமலமாகு
மொருகூறுடம்பாகு முண்டற்றவன்ன
மிருகூறுநீயாகி லொருகூறுநீயா
மிழிக்கும்மலஞ்சோ ரிடப்பட்டதுடலே.



(இ-ள்.) உண்டற்ற வன்னம் - புசித்துச்சீரணிக்கப் பெற்றவாகாரமானது, ஒருகூறு - ஒருபங்கு; மனமாகும் - மனமாகப்பிலக்கும், ஒருகூறு - ஒருபங்கு, மலமாகும் - மலமாக நீங்கும், ஒருகூறு - ஒருபங்கு, உடம்பாகும் - தேகமாகப்பருக்கும், இருகூறு - இவற்றுளிரண்டுபங்கு, நீயாகில் - நீயானால், ஒருகூறுநீயாம் - மற்றொருபங்கு நீயாவை, (அது நீயாகத்தக்கதன்று) இழிக்கும் - யாவரானு மருவருக்கத்தக்க, மலம் - அமேத்தியம், சோரிடப்பட்டது - கசிந்துகொண்டிருக்கப் பட்டது, உடல் - தூலவுடலாதலின். எ-று.

(இ-ம்.) தூலவுடலானென்பதைக் களைவான்வேண்டி யிங்ஙனங்கூறினா ரென்பதாம்.

(௬௩)

(அ-கை.) சடமாங்குண முணர்த்தல்.

(கவி.) கிளராதரத்துண்ணு மன்னஞ்சுடக்கை
கிட்டப்பொறுதே யிருந்தார்கிடந்தார்
தளராதுறுப்பொன்று முயிர்போகவன்றே
தழற்பள்ளிமீதே துயின்றார்சகித்தே.

(இ-ள்.) கிளர் - மிகுந்த, ஆதரத்து - ஆசையினால், உண்ணும் - புசிக்கின்ற, அன்னஞ்சுட - அன்னமானதுசுட, கை - கையானது, கிட்ட - அவ்வன்னத்துக்குச்சமீபிக்க, பொறுதே - சகிக்காமலே, இருந்தார் - இருந்தவர்கள், கிடந்தார் - படுக்கையானவர்களாய், தளராதுறுப்பொன்றும் - அவயவங்களிலொன்றுங்குறையாமல், உயிர்போக - உயிர்நீங்க, அன்றே - அக்கணமே, தழற்பள்ளிமீதே - அக்கினிமெத்தையில், துயின்றார்சகித்தே - சகித்து நித்திரைசெய்தார்கள். எ-று.

(இ-ம்.) அக்கினியி னுஷ்ணசத்தியை யுணரற்பால திவ்வுடம்பன் றென்பதாம். (௪௪)

(அ-கை.) போலி யியக்கமாங் குணமுணர்த்தல்.

(கவி.) நிழற்பாவைகண்ணாடி யிற்பாவைகைகா
னிமிர்க்குமுடக்கு மிவன்செய்யுமெல்லாத்
தொழிற்பாலவாமற்றிவ் வுடலஞ்செய்தொழிலுஞ்
சுடர்ஞானவடிவான வன்செய்ததொழிலே.

(இ-ள்.) நிழற்பாவை- ரவியாதியாற்காணப்பட்ட தேகச்சாயையும்,கண்ணாடியிற்பாவை-ஆடியிற்காணப்படுந்தேகச்சாயையும், கைகால் - அத்தபாதங்களே, நிமிர்க்குமுடக்கும் - நீட்டுமுடக்கும், (இவையெல்லாம்) இவன் - இம்மனிதன், செய்யும் - செய்கின்ற, எல்லாத்தொழிற்பாலவாம் - சமஸ்தகிரியாவண்ணமாம், (அதுபோல) இவ்வுடலஞ்செய்தொழிலும் - இத்தேகஞ் செய்யுங்கிரியைகளும், சுடர் - சதோதயமாகப் பிரகாசிக்கின்ற, ஞானவடிவானவன் - ஞானசொரூபியானவாத்மா, செய்ததொழிலே - செய்யுந்தொழில்களாம். எ-று. மற்றென்பதசை.

(இ-ம்.) தேகியின தியக்க மித்தேகத்ததாகத் தோற்றுமென்பதாம். (௪௫)

(அ-கை.) அன்னியமாங் குணமுணர்த்தல்.

(கவி.) அறிகின்றபொருளென்று மறிவானின்வேறே
யானாலிவ்வூனை நானென்னலாமோ
செறிகின்றபுள்ளல்ல வேகூடிவ்வகையே
சடமானவுடனின்னில் வேறென்றுதெளியே.



(இ-ள்.) அறிகின்றபொருள் - அறியப்படும்வஸ்துக்கள், என்றும் - எப்போதும், அறிவானில் - அறிபவனுக்கு, வேறேயானால் - புறமாகவே யிருக்குமானால், இவ்வூனை - இம்மாமிசநிறைந்ததேகத்தை, நானென்னலாமோ - நானென்றுசொல்லலாமோ, செறிகின்றபுள்ளல்லவேகூடு - அடைந்திருக்கின்ற பட்சியல்லவே கூண்டானது, இவ்வகையே - இவ்விதமாகவே, சடமானவுடல் - சடவடிவமான வித்தேகம், நின்னில்- தானானவுனக்கு, வேறென்றுதெளி - அன்னியமென்று தெளிந்து கொள்வாய். எ-று. ஏ - அசை.

(இ-ம்.) ஆத்மாவே தானென்பதை யறிவித்ததாம். (௪௬)

(அ-கை.) இத்தேகம் பௌதிகமாந் தன்மையுணர்த்தல்.

(கவி.) நிலமாகும்வற்பென்ற னெகிழ்கின்றனீரா
நெருப்பாமிதிற்சுட்ட வெல்லாமுமனிலஞ்
சலமானபுரையான வானிந்தவுடலஞ்
சடமானவைம்பூத வுருவங்கடாமே.

(இ-ள்.) நிலமாகும்வற்பென்றல் - கடினமென்றது பிருதுவியாம், நெகிழ்கின்ற னீராம் - நெகிழ்ச்சியையுடையதப்புவாம், இதிற்சுட்டவெல்லாமும் - யாவற்றையுமெரிக்குந் தொழிலையுடையவிது, நெருப்பாம் - அக்கினியாம், அனிலஞ்சலமான - சலிப்பையுடையது வாயுவாம், புரையானவான் - புரையையுடைய தாகாயமாம், இந்தவுடலம் - இத்தேகமும், சடமான - சடத்தன்மையான - ஐம்பூதவுருவங்கடாமே, பஞ்சபூதங்களிலேகதேசமா யுண்டான வடிவங்களாம். எ-று.

(இ-ம்.) பஞ்சபூதகாரியமான தூலதேகஞ் சடமாதலிற் றா னல்லவென நீக்கினதாம். (சஎ)

(அ-கை.) இவ்வேதுக்களாற் றூலதேகந் தானன்றென வங்கீகரித் திதனையறியுங் கண்ணாதிய ஞானேந்திரியங்க டானாக வேண்டுமெனக் கருதிய சீடனை நோக்கி யவைகளுந் தானல்லவெனக் களைதல்.

(கவி.) விழியைப்புமானென்னில் ரவியாதியாலே
விளக்கஞ்செயுமற்ற வுருவத்தையற்றே
லொழியப்படுங்கன்ன முதனாலுமவனன்
றுருக்கண்டகண்டன்னை யொப்பாகவுன்னே.

(இ-ள்.) விழியைப்புமானென்னில் - இத்தூலதேகத்தையறியுங் கண்ணையான்மா வெனக்கொள்ளில், ரவியாதியால் - சோமசூரியாக்கினியினால், மற்றவுருவத்தை - கண்தவிரமற்ற வுருவங்களை, விளக்கஞ்செயும் - விளக்குவிக்கும்; அற்றேல் - அத்தன்மைத்தாயின், ஒழியப்படும் - அதுநீங்கலாகிய, கன்னமுதனாலும் - சுரோத்திரமுதலிய நான்குமோ, அவனன்று - அவ்வாத்மாவல்ல, உருக்கண்டகண்டன்னை - உருவத்தை யறிந்த கண்ணை; ஒப்பாகவுன்னே - சமானமாகக்கருதுவாய். எ-று.

(இ-ம்.) இவ்வேதுக்களாற் சுரோத்திரமாதிய ஞானேந்திரியமைந்துந் தானன்றென்பதாம். (சஅ)

(அ-கை.) முன்ஞானேந்திரியந் தானல்லவென்றபடி கன்மேந்திரியமுந் தானன்றெனக்களைதல்.



வேறு.

(கவி.) அழலுண்பொருள்களிலுண்பவை முக்கூறதின்முற்
றணியென்பு நடுக்கூறது மச்சைக்கிடனாகு [கூ
மெழில்கொண்ட கடைக்கூறது வாக்காயெழுமென்
றே யியனான்மறையந்தங்க ளிசைக்கின்றன வா
[மே.

(இ-ள்.) உண்பொருள்களில் - உண்ணத்தக்கவைகளில், அழல் - உதராக்கினியினால், உண்பவை - கிரணித்தசாரமானவை, முக்கூறு - மூன்றுபங்காம், அதின்முற்கூறு-அச்சாரங்களில் முதற்பங்கு; அணியென்பு - தரிக்கப்பட்ட வஸ்தியாம், நடுக்கூறது - நடுப்பங்கானது, மச்சைக்கிடனாகும் - மாமிசத்துக்காதாரமாம், எழில்கொண்ட - அழகிய, கடைக்கூறது - கடைப்பங்கானது, வாக்காயெழுமென்று-வாக்கிந்திரியமாமென்று, இயனான்மறையந்தங்கள் - இயல்பாயுள்ள நான்குவேதங்களின் முடிபாகியவுபநிடதங்கள், இசைக்கின்றனவாம் - சொல்லுகின்றனவாம். எ-று.

எனவே; பிரிதிவியி னமிசமாகி யுணவின் சாரவாகாரமாத் தடித்தது எலும்பு மாமிசம் வாக்கிந்திரிய மாதலின் கன்மேந்திரியமைந்தனுள் பிரதமையாயுள்ள வாக்கிந்திரியந் தானாகா விடத்து மற்றைய நான்குந் தானன்றெனக் குறிப்பிக்கப்பெற் றாம். சாரமாகிய காரியத்தைக் காரணமாக வுபசரித்தார்.

(இ-ம்.) இவ்வேதுக்களாற் கன்மேந்திரியமுந் தானன்றென்பதாம். (சகூ)

